உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# தமிழர்க்கான சிலகுறிப்புகள்.

**1.** கிபி. 1422 முதல் 1449 வரையில் அரசாண்ட விஜயநகரத்து இரண்டாவது தேவஇராயர் என்பவர் தம்முடைய அரசாட்சிக்காலத்தில் ஒவ்வொரு கிராமத்தினின்றும் தகுந்த மனிதர்களை வரவழைத்து ஒரு பெரிய கூட்டம் கூட்டி, அதில் கல்யாண சந்தர்ப்பத்தில், மொய்ப்பணம் முதலியன வாங்குவது சாத்திர சம்மதம் அல்ல என்று தீர்மானம் செய்து அந்தப்படியே மொய்வாங்கும் வழக்கத்தை நிறுத்த உத்திரவளித்ததாக ஸ்ரீமான் - S. கிருஷ்ணிசாமி அய்யங்கார் M. A. அவர்கள் காமன்வில் என்னும் பத்திரிகையில் தெரிவித்திருக்கிறார்.

ஆகையால் தமிழர்கள் ஒவ்வொருவரும், இவ்வழக்கத்தை நிறுத்தி, அதற்குப்பதிலாகத் தமிழபிவிர்த்தியின் பொருட்டும் சைவசித்தாந்த சாஸ்திரவளர்ச்சியின் பொருட்டும் அக்காலங்களில் பணம் வசூலித்துச் சைவசித்தாந்த சமாஜத்தின் மூலியமாய் மூலதனம் ஏற்படுத்தினால் புகழும் புண்ணியமும் உண்டாம்.

**2.** மாயை, அருள், மறுபிறப்பு, கர்மம் இவைகளைப்பற்றிய வரலாறுகள் எல்லாம் முதல் முதல் தமிழர்களிடத்திருந்து தான் வெளியாயின. ஆரியரிடமிருந்து அல்ல என்று காலஞ்சென்ற பிரொவிசர் சுந்தரம்பிள்ளை M. A. அவர்கள் கூறிப்போந்தார்கள் என்று நியூரிபார்மர் என்னும் பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

**3 (a)** ஆரியர் என்பவர் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் நான்கு ஜாதியைச் சேர்ந்தவர்கள்.

(b) மகமதியர் என்பார் ஷேக், சைலத், சுன்னில், பட்டான்ஸ் என் னும் நான்கு ஜாதியைச் சேர்ந்தவர்கள்.

(c) தமிழர் என்பார் வேளாளர் முதலிய 18 ஜாதியைச் சேர்ந்தவர் களும், 18 உபஜாதியைச் சேர்ந்தவர்களுமாம்.

(d) கிறிஸ்தவர் என்பார் ரோமன் கத்தோலிக், பிராடஸ்டாண்ட், கீரிக்சர்ச் என்னும் மூன்று பெரிய ஜாதியைச் சேர்ந்தவர்கள்.

இப்படியே ஒவ்வொரு வகுப்பாருள்ளும் உள்வகுப்புகள் உண்டு. மேற் சொன்ன நான்கு பெரிய ஜாதியாரும் தனித்தளி வகுப்பாரே யொழிய ஒரே வகுப்பினர் அல்ல.

**4.** ஆரியர்கள் இத்தமிழ்நாட்டையடைந்த பின்னர்த்தான் பதி லட் சணத்தையும், பாசலட்சணத்தையும், பசு லட்சணத்தையும் உணர்ந்தார்கள் என்னும் விடயத்தை,

அடியில் வருமாறு சாந்தோக்கிய உபநிஷத 5 வது பிரபாடகம் திரிதிய கண்டம், 6, 7, சுலோகங்களில் ஓதப்பட்டி ருக்கிறது. அது வருமாறு:

"கௌதம கோத்திரியான சுவேதகேதுவின் பிதாவாகிய ஆருணி யென்பவர், பிரவாகனென்னும் அரசனிடம் போக (அக்காலத்தில் ஆரியர்கள் தமிழ் அரசர்களை இராஜன்னியர் என்று அழைப்பது வழக்கம் இவ் வழக்கு இருக்குவேதத்திலும் உபநிஷத்துக்களிலும் உள்ளது) அவ்வரசன் ஆருணி முனிவரைப் பூசித்துத் திரவியம் வேண்டுமென்றாற் கேளுமென்று சொல்ல, அம்முனிவர் அரசனே எனக்கிவ்வுலக சம்பந்தமான பொருள் வேண்டியதில்லை, எனது குமாரனிடம் நீர் கூறிய வார்த்தைக்குப் பொருள் சொல்லவேண்டு மென்று கேட்க, அரசன் மிகத்துக்கித்து வித்தியாப்பியாசத்தின் பொருட்டு நீர் **அநேககாலம்** இவ்விடத்தில் வசிக்கவேண்டு மென்று கௌதமருக்குச் சொல்லிப் பின்பு அவரைப்பார்த்து இந்த வித்தையானது இதற்கு முன் பிராமணர்கட்குத் (ஆரியரில் ஒருபிரிவார்) தெரிந்ததல்ல, இப்போது உனக்கு அப்பொருளை விளக்குகிறேன் என்று அதை உபதேசித்தார்."

இதேமாதிரி ஜனகன் என்னும் தமிழ் அரசர் யாஞ்ஞவல்கியர் முதலிய ஆரிய முனிவர்கட்கு உபதேசித்ததை உபநிஷத்துக்களால் அறிகி றோம்.

துடிசைகிழார் அ. சிதம்பரனார்.

சித்தாந்தம் - 1916 ஸ்ரீ - அக்டோபர் மீ